# Beginner Course - தேவன்/God

# 6 தேவனுடைய பண்புகள் / குணங்கள் - பாகம் 2

YESUDAS SOLOMON

# பொருளடக்கம்

1. தேவனுடைய பண்புகள் - ஒரு அறிமுகம்
2. தேவனுக்கு மட்டுமே உரிய பண்புகள்/குணங்கள்
   (*In-Communicable* - மனிதனோடு பகிர்ந்துக்கொள்ள கூடாதவை)
3. தேவனுக்கும் மனிதனுக்கும் பொதுவான பண்புகள்/குணங்கள்
   (*Communicable* - மனிதனோடு பகிர்ந்துக்கொள்ள கூடியவை)

# 3. தேவனுக்கும் மனிதனுக்கும் பொதுவான பண்புகள்/குணங்கள்

# 3. தேவனுக்கும் மனிதனுக்கும் பொதுவானவை

- ஆங்கிலத்தில் *"Communicable attributes of God"*
- மனிதனோடு பகிர்ந்துக்கொள்ள கூடியவை
- தேவனிடமும் மனிதனிடமும் இந்த பண்புகளை பார்க்கலாம்
- மனிதனால் இவைகளை தனக்குள் கொண்டுவர முடியும்
- இந்த பண்புகள் நம்மிடம் இருக்கிறதா என்று ஆராய்ந்துப் பார்ப்பது மிக மிக அவசியம்
- அநேக பண்புகள் இருப்பினும் ஒரு சிலதை இப்பொழுது பார்க்கலாம்
- வேதத்தை வாசிக்க வாசிக்க மற்றவைகளை அறிந்துக்கொள்ளலாம்
- அநேக வசனங்களை கொடுத்துள்ளேன், கண்டிப்பாக வாசியுங்கள்

# 3. தேவனுக்கும் மனிதனுக்கும் பொதுவானவை

## தேவன்

- நல்லவர் / *God is Good*
- உண்மையுள்ளவர் / நம்பதகுந்தவர் / *Faithful*
- அன்பானவர் / *God is Love*
- பரிசுத்தர் / *God is Holy*
- இரக்கமுள்ளவர் / *God is Merciful*
- பொறுமையுள்ளவர்
- மன்னிக்கிறவர்

## மனிதன்

- நல்லவனாய் இருக்கனும்
- உண்மையுள்ளவனாய் இருக்கனும்
- அன்பானவனாய் இருக்கனும்
- பரிசுத்தமாய் இருக்கனும்
- இரக்கமுள்ளவனாய் இருக்கனும்
- பொறுமையுள்ளவனாய் இருக்கனும்
- மன்னிக்கிறவனாய் இருக்கனும்

# 1. நல்லவர் / *God is Good*

## தேவன்

- தேவன் நல்லவர் - எஸ்றா *3:11;* சங் *106:1; 107:1; 25:8; 100:5;* எரே *33:11*
- சுத்த இருதயமுள்ளவர்களுக்கு தேவன் நல்லவர் - சங் *73:1*
- தமக்குக் காத்திருக்கிறவர்களுக்கும் தம்மைத் தேடுகிற ஆத்துமாவுக்கும் கர்த்தர் நல்லவர் - புல *3:25*
- கர்த்தர் நல்லவர் என்பதை ருசித்துப்பாருங்கள் - சங் *34:8*

# 1. நல்லவர் / God is Good

## மனிதன்

- நல்ல மனுஷன் இருதயமாகிய நல்ல பொக்கிஷத்திலிருந்து நல்லவைகளை எடுத்துக்காட்டுகிறான், பொல்லாத மனுஷன் பொல்லாத பொக்கிஷத்திலிருந்து பொல்லாதவைகளை எடுத்துக்காட்டுகிறான் - மத் *12:35*
- நல்லவர்களின் வழியிலே நடக்க வேண்டும் - நீதி *2:20*
- நல்ல வழி எங்கே என்று பார்த்து, அதிலே நடவுங்கள் - எரே *6:16*
- நல்லவர்களாய் இருக்க புத்திசொல்லு - தீத் *2:5*
- நல்லவன் கர்த்தரிடத்தில் தயைபெறுவான் - நீதி *12:2*
- நல்லவர்களுக்கு தேவன் நன்மை செய்கிறார் - சங் *125:4*

# 1. நல்லவர் / *God is Good*

## லூக் *18:19* - தேவன் மட்டுமே நல்லவரா? பதில் மத் *12:35*

- லூக் *18:19* அதற்கு இயேசு: நீ என்னை நல்லவன் என்று சொல்வானேன்? தேவன் ஒருவர் தவிர நல்லவன் ஒருவனும் இல்லையே.
- மத் *12:35* நல்ல மனுஷன் இருதயமாகிய நல்ல பொக்கிஷத்திலிருந்து நல்லவைகளை எடுத்துக்காட்டுகிறான், பொல்லாத மனுஷன் பொல்லாத பொக்கிஷத்திலிருந்து பொல்லாதவைகளை எடுத்துக்காட்டுகிறான்.

# 1. நல்லவர் / God is Good

## நல்லவர்களாய் இருந்தவர்கள்:

- கொர்நெலியு - அப் 10:22 - நூற்றுக்கு அதிபதி
- பர்னபா - அப் 11:24
- அனனியா - அப் 22:12

# 2. உண்மையுள்ளவர் / நம்பதகுந்தவர் / *Faithful*

## தேவன்

- தேவன் உண்மையுள்ளவர் - 2 தீமோ 2:13; 1 தெச 5:24; 2 தெச 3:3
- தமது கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கு அவர் ஆயிரம் தலைமுறைமட்டும் உடன்படிக்கையையும் தயவையும் காக்கிற உண்மையுள்ள தேவன் - உபா 7:9
- உமது உண்மை பெரிதாயிருக்கிறது - புலம் 3:23

# 2. உண்மையுள்ளவர் / நம்பதகுந்தவர் / *Faithful*

## தேவன்

- இயற்கைக்கு - சங் *119:90; ஆதி 8:22; கொலோ 1:17*
- தம்முடைய சிநேகிதருக்கு சொன்னதை செய்வதில்
  - ஆபிரகாம் - ஆதி *15:4; 18:14; 21:1,2*
  - மோசே - யாத் *3:21; 12:35,36*
  - யோசுவா - யோசு *1:1-5; 23:14*
  - தாவீது - 2 சாமு *7:12,13;* லூக் *1:31-33*
  - எசேக்கியா - 2 இராஜா *19:20-34*

# 2. உண்மையுள்ளவர் / நம்பதகுந்தவர் / *Faithful*

## தேவன்

- தம்முடைய விரோதிகளுக்கு சொன்னதை செய்வதில்
  - சாத்தான் - ஆதி *3:15;* கலா *4:5*
  - ஆகாப் - *1* இராஜா *21:17-19; 22:34-38*
  - யேசபேல் - *1* இராஜா *21:23; 2* இரா *9:30,35-37*
- நம்முடைய சோதனைகளில் - *1* கொரி *10:13*
- நம்முடைய உபத்திரவங்களில் - சங் *119:75;* எபி *12:6*
- நம்முடைய பாவங்களை மன்னிப்பதில் - *1* யோவா *1:9*
- நம்முடைய ஜெபத்தை கேட்பதில் - சங் *143:1*
- நம்மை ஸ்திரப்படுத்துவதில் - *1* கொரி *1:8,9; 1* தெச *5:23,25; 2* தெச *3:3*
- நம்மை காப்பாற்றுவதில் - சங் *89:20,24; 1* சாமு *12:22; 2* தீமோ *2:13*

# 2. உண்மையுள்ளவர் / நம்பதகுந்தவர் / *Faithful*

## மனிதன்

- *1* தீமோ *3:11;* எபி *10:22 -* எல்லாவற்றிலேயும் உண்மையுள்ளவர்களுமாய் இருக்கவேண்டும்.
- வெளி *2:10 -* நீ மரணபரியந்தம் உண்மையாயிரு.
- யோசு *24:14 -* கர்த்தரை உத்தமமும் உண்மையுமாய்ச் சேவியுங்கள்.
- சகரி *8:16 -* அவனவன் பிறனோடே உண்மையைப் பேசுங்கள்;
- நீதி *12:22 -* உண்மையாய் நடக்கிறவர்களோ அவருக்குப் பிரியம்.
- நீதி *28:20 -* உண்மையுள்ள மனுஷன் பரிபூரண ஆசீர்வாதங்களைப் பெறுவான்;
- எசே *18:9 -* என் கட்டளைகளின்படி நடந்து, என் நியாயங்களைக் கைக்கொண்டு, உண்மையாயிருப்பானாகில் அவனே நீதிமான்
- *1* யோவா *3:18 -* என் பிள்ளைகளே, வசனத்தினாலும் நாவினாலுமல்ல, கிரியையினாலும் உண்மையினாலும் அன்புகூரக்கடவோம்.
- பிலி *4:8 -* உண்மையுள்ளவைகளெவைகளோ அவைகளையே சிந்தித்துக்கொண்டிருங்கள்.
- *2* சாமு *22:24 -* மன உண்மையாயிருப்பதை பற்றி பேசுகிறது

# 2. உண்மையுள்ளவர் / நம்பதகுந்தவர் / *Faithful*

## மனிதன்

- உதாரணங்கள்:
  - மோசே - எண் *12:7*
  - எசேக்கியா ராஜா - 2 இரா *20:3*
  - காணிக்கை வசூலிப்பவர்கள் - 2 இரா *12:15; 22:7*
  - தானியேல் - தானி *6:4*
  - அனனியா - நெகே *7:2*
  - எப்பாப்பிரா - கொலோ *1:7*
  - தீகி - கொலோ *4:7*
  - ஒநேசமு - கொலோ *4:9*
  - பொக்கிஷ அறைகளின் விசாரிப்பு காரர் - நெகே *13:13*

# 3. அன்பானவர் / God is Love

## தேவன்

- 1 யோவா 4:8 - தேவன் அன்பாகவே இருக்கிறார்.
- யோவா 3:16 - தம்முடைய ஒரேபேறான குமாரனை தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார்.
- சில உதாரணங்கள்:
    - இஸ்ரவேலரை - உபா 7:7,8; ஏசா 49:15; எரே 31:3; ஓசி 11:1; மல் 1:2
    - உலக மக்கள் அனைவரையும் - யோவா 3:16; 1 தீமோ 2:3,4; 2 பேது 3:9
    - சபையை - எபே 5:25-32
    - பாவிகளை - ரோம 5:8
    - ஆவிக்குரிய கிறிஸ்தவர்களை - கலா 2:20
    - Carnel Christian / பாரம்பரிய கிறிஸ்தவர்கள் - லூக் 15:12-24
    - உற்சாகமாய் கொடுக்கிறவனை - 2 கொரி 9:7

# 3. அன்பானவர் / God is Love

## மனிதன்

- தேவனை அன்பு கூரவேண்டும் - யாத் 20:6; உபா 19:8; யோசு 23:11; ரோம 8:28
- அவருடைய கற்பனைகளின்படி நடப்பதே அன்பு - 1 யோவா 5:3; 2 யோவா 1:6
- உன்னில் நீ அன்புகூருவதுபோல் பிறனையும் - லேவி 19:18; மத் 22:39; எபே 5:2; 1 யோவா 2:10;
- உங்களிடத்தில் வாசம்பண்ணுகிற அந்நியனை - லேவி 19:34;
- ஒருவரிடத்திலொருவர் அன்புகூருகிறது நம்முடைய கடன் - ரோம 13:8; 1 பேது 4:8; 1 யோவா 3:11;
- அன்புள்ளவைகளெவைகளோ அவைகளையே சிந்தித்துக்கொண்டிருங்கள் - பிலி 4:8
- பரிசுத்தஆவியினாலே தேவ அன்பு நம்முடைய இருதயங்களில் ஊற்றப்பட்டிருக்கிறது - ரோம 5:5
- ஆவியின் கனியில் ஒன்று - கலா 5:22
- அன்பில்லாதவன் தேவனை அறியான் - 1 யோவா 4:8
- வரங்களை விட அன்பே முக்கியமானது - 1 கொரி 13:1-3
- உங்கள் அன்பு மாயமற்றதாயிருப்பதாக - ரோம 12:9
- உலகத்திலும் உலகத்திலுள்ளவைகளிலும் அன்புகூராதிருங்கள் - 1 யோவா 2:15

# 3. அன்பானவர் / God is Love

## மனிதன்

- உதாரணங்கள்:
  - தாவீது - சங் 18:1
  - தகப்பன் - நீதி 3:12
  - சிநேகிதன் - யோவா 15:13
  - ஒரு ஸ்திரி - லூக் 7:47
  - மனித அவதாரமான இயேசு கிறிஸ்து - யோவா 13:1
  - இயேசுவின் சிஷர்கள் - யோவா 13:35
  - மெலித்தா தீவின் மக்கள் - அப் 28:2
  - பவுல் அப்போஸ்தலன் - 1 கொரி 16:24;
  - தெசலோனிக்கேய சபை விசுவாசிகள் - 1 தெச 3:12; 2 தெச 1:3

# 4. பரிசுத்தர் / *God is Holy*

## தேவன்

- தேவன் பரிசுத்தமுள்ளவர் - ஏசா *6:3;* வெளி *4:8;* சங் *99:9; 99:5; 1* பேது *1:15,16;* ஏசா *6:1-5*
- நம்முடைய தேவன் மட்டுமே பரிசுத்தர் - சங் *22:3; 1* சாமு *2:2*
- பரிசுத்தத்தில் மகத்துவமுள்ளவர் - யாத் *15:11*
- மகத்துவம் பரிசுத்தமுள்ளது - *2* நாளா *20:21*
- சிங்காசனம் பரிசுத்தமானது - சங் *47:8*
- பரலோகம் பரிசுத்தமானது - *2* நாளா *30:27;* சங் *3:4*
- உடன்படிக்கைகள் பரிசுத்தமானது - தானி *11:30*
- தேவன் நம்மை அழைத்த அழைப்பு பரிசுத்தமானது - *2* தீமோ *1:9*
- அவரே நமக்கு பரிசுத்த ஸ்தலமாயிருப்பார் - ஏசா *8:14*

# 4. பரிசுத்தர் / God is Holy

## மனிதன்

- இயேசுவின் இரத்தத்தால் பரிசுத்தமாக்கப்படுகிறோம் - எபி *10:10*
- பரிசுத்த ஆவியினாவர் நம்மை பரிசுத்தமாக்குகிறார் - *1* பேது *1:2;* ரோம *15:15*
- நாம் ஆவிக்குரிய வகையில் பரிசுத்த ஜாதியாய் இருக்கிறோம் - யாத் *19:6; 1* பேது *2:9*
- யாவரோடும் பரிசுத்தமுள்ளவர்களாயிருக்கவும் நாடுங்கள் - எபி *12:14*
- பரிசுத்தமில்லாமல் ஒருவனும் கர்த்தரைத் தரிசிப்பதில்லையே - எபி *12:14;* மத் *5:8*
- உங்கள் இருதயங்களைப் பரிசுத்தமாக்குங்கள் - யாக் *4:8*
- பரிசுத்த அலங்காரத்துடனே கர்த்தரைத் தொழுதுகொள்ளுங்கள் - சங் *29:2; 1* நாளா *16:29*
- சரீரங்களைப் பரிசுத்தமும் தேவனுக்குப் பிரியமுமான ஜீவபலியாக - புத்தியுள்ள ஆராதனை - ரோம *12:1*
- தேவன் பரிசுத்தராயிருக்கிறதுபோல, நீங்களும் உங்கள் நடக்கைகளெல்லாவற்றிலேயும் பரிசுத்தராயிருங்கள் - *1* பேது *1:15;* லேவி *19:2; 11:45*

# 4. பரிசுத்தர் / God is Holy

## மனிதன்

- சில உதாரணங்கள்:
  - எலிசா - 2 இரா 4:9
  - ஆரோன் - சங் 106:16
  - ஆரோனின் சந்ததி - 1 நாளா 23:13; 2 நாளா 6:41; 2 நாளா 26:18
  - ஆசாரியர்கள், லேவியர்கள் - 2 நாளா 23:6; எஸ்றா 8:28
  - தேவனுடைய தீர்க்கதரிசிகள் - லூக் 1:73
  - பூமியிலுள்ள பரிசுத்தவான்கள் - சங் 16:3; தானி 7:18
  - இரட்சிக்கப்பட்டவர்கள் பரிசுத்த ஜனம் - ஏசா 62:12
  - யோவான் ஸ்நானகன் - மாற் 6:20
  - மனித அவதாரமான இயேசு கிறிஸ்து - லூக் 1:35; 4:34; அப் 4:28
  - பெபேயாள் - ரோம 16:1
  - விசுவாசிகளாகிய தேவனுடைய சபை - 1 கொரி 1:2; எபே 1:1; பிலி 1:1; ரோம 15:31; ரோம 1:2; அப் 9:32

# 5. இரக்கமுள்ளவர் / *God is Merciful*

## தேவன்

- தேவன் இரக்கமுள்ளவர் - யாத் *34:6;* நெகே *9:17; 9:31;* சங் *86:15; 103:8; 145:8*
- இரக்கங்களின் பிதா - *2* கொரி *1:3*
- இரக்கத்தில் ஐசுவரியமுள்ளவர் - எபே *2:4*
- அவருடைய இரக்கங்களுக்கு முடிவில்லை - புல *3:22*
- அவருடைய இரக்கங்கள் மகா பெரியது - *2* சாமு *24:14*
- இரக்கங்களின்படியே அநேகந்தரம் விடுதலையாக்கிவிட்டீர் - நெகே *9:27-31*
- பாவங்களை அறிக்கை செய்து விட்டுவிடுகிறவனோ இரக்கம் பெறுவான் - நீதி *28:13*
- இரக்கங்களினாலும் முடிசூட்டி - சங் *103:4*
- என்னிடத்தில் அன்புகூர்ந்து, என் கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கோ ஆயிரம் தலைமுறைமட்டும் இரக்கஞ்செய்கிறவராயிருக்கிறேன் - யாத் *20:6*

# 5. இரக்கமுள்ளவர் / God is Merciful

**மனிதன்**

- உங்கள் பிதா இரக்கமுள்ளவராயிருக்கிறதுபோல, நீங்களும் இரக்கமுள்ளவர்களாயிருங்கள் - லூக் *6:36; 1* பேது *3:8;* யூதா *1:22*
- பலியை அல்ல இரக்கத்தையும், தேவனை அறிகிற அறிவையும் விரும்புகிறேன் - ஓசி *6:6*
- இரக்கமுள்ளவர்கள் இரக்கம் பெறுவார்கள் - மத் *5:7*
- இரக்கமுள்ளவர்கள் செம்மையானவர்கள் - சங் *112:4*
- தன்தன் சகோதரனுக்குத் தயவும் இரக்கமும் செய்ய வேண்டும் - சக *7:9*
- இரக்கஞ்செய்கிறவன் உற்சாகத்துடனே செய்யக்கடவன் - ரோம *12:8*
- உருக்கமான இரக்கத்தையும் தரித்துக்கொள்ளனும் - கொலோ *3:12*
- இரக்கஞ்செய்யாதவனுக்கு இரக்கமில்லாத நியாயத்தீர்ப்புக் கிடைக்கும்; நியாயத்தீர்ப்புக்குமுன்பாக இரக்கம் மேன்மைபாராட்டும் - யாக் *2:13*
- இரக்கத்தைச் சிநேகித்து, தேவனுக்கு முன்பாக மனத்தாழ்மையாய் நடப்பதை அல்லாமல் வேறே என்னத்தைக் கர்த்தர் உன்னிடத்தில் கேட்கிறார் - மீகா *6:8*

# 6. பொறுமையுள்ளவர்

## தேவன்

- நீடிய பொறுமையுள்ளவர் - சங் *86:15; எரே 15:15*
- பொறுமையில் ஐசுவரியமுள்ளவர் - ரோம *2:4*
- அந்தப்படியே தேவன் தம்மை நோக்கி இரவும் பகலும் கூப்பிடுகிறவர்களாகிய தம்மால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களின் விஷயத்தில் நீடிய பொறுமையுள்ளவராயிருந்து அவர்களுக்கு நியாயஞ்செய்யாமலிருப்பாரோ - லூக் *18:7*
- தேவவசனத்தினால் பொறுமையும் ஆறுதலும் உண்டாகும் - ரோம *15:4*
- பொறுமையையும் ஆறுதலையும் அளிக்கும் தேவன் - ரோம *15:6*

# 6. பொறுமையுள்ளவர்

## மனிதன்

- நாம் பொறுமை உள்ளவர்களாய் இருக்கனும் - தீத் *3:2; 2:2; 1* தீமோ *3:3;* கொலோ *3:12*
- நமக்கு நியமித்திருக்கிற ஓட்டத்தில் பொறுமையோடே ஓடக்கடவோம் - எபி *12:1*
- உபத்திரவத்திலே பொறுமையாயிருங்கள் - ரோம *12:12*
- ஆவியின் கனியில் ஒன்று - கலா *5:22*
- பெருமையுள்ளவனைப்பார்க்கிலும் பொறுமையுள்ளவன் உத்தமன் - பிர *7:8*
- நல்ல நிலத்தில் விதைக்கப்பட்டவர்கள் வசனத்தைக் கேட்டு, அதை இருதயத்திலே காத்துப் பொறுமையுடனே பலன்கொடுக்கிறவர்களாயிருக்கிறார்கள் - லூக் *8:15*

# 6. பொறுமையுள்ளவர்

## மனிதன்

- நீங்கள் தேவனுடைய சித்தத்தின்படி செய்து, வாக்குத்தத்தம்பண்ணப்பட்டதைப் பெறும்படிக்குப் பொறுமை உங்களுக்கு வேண்டியதாயிருக்கிறது - எபி *10:36*
- குறைவுள்ளவர்களாயிராமல், பூரணராயும் நிறைவுள்ளவர்களாயும் இருக்கும்படி, பொறுமையானது பூரண கிரியை செய்யக்கடவது - யாக் *1:4*
- அப்போஸ்தலர் மிகுந்த பொறுமை உள்ளவர்களாய் - *2* கொரி *6:4; 2* தீமோ *3:10*
- பொறுமையை அடையும்படி நாடு - *1* தீமோ *6:11*
- கர்த்தர் வருமளவும் நீடிய பொறுமையாயிருங்கள் - யாக் *5:7*

# 7. மன்னிக்கிறவர்

## தேவன்

- கர்த்தர் அக்கிரமத்தையும் மீறுதலையும் மன்னிக்கிறவர் - எண் *14:17; சங் 32:1; 86:5;* ரோம *4:7*
- பாவத்தின் தோஷத்தை மன்னிக்கிறவர் - சங் *32:5*
- உமது ஜனத்தின் அக்கிரமத்தை மன்னித்து, அவர்கள் பாவத்தையெல்லாம் மூடினீர் - சங் *85:2*
- அவரோ அவர்களை அழிக்காமல், இரக்கமுள்ளவராய் அவர்கள் அக்கிரமத்தை மன்னித்தார் - சங் *78:38*
- எந்தப் பாவமும் எந்தத் தூஷணமும் மனுஷருக்கு மன்னிக்கப்படும்; ஆவியானவருக்கு விரோதமான தூஷணமோ மனுஷருக்கு மன்னிக்கப்படுவதில்லை - மத் *12:31*

# 7. மன்னிக்கிறவர்

## மனிதன்

- கிறிஸ்துவுக்குள் தேவன் உங்களுக்கு மன்னித்ததுபோல, நீங்களும் ஒருவருக்கொருவர் மன்னியுங்கள் - எபே *4:32;* கொலோ *3:13*
- குற்றத்தை மன்னிப்பது மனுஷனுக்கு மகிமை - நீதி *19:11*
- எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும், எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும் - யோவா *20:23; 2* கொரி *2:10;* யாக் *5:15*

# 7. மன்னிக்கிறவர்

## மனிதன்

- எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறதுபோல எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னியும் - மத் *6:12*
- மனுஷருடைய தப்பிதங்களை நீங்கள் அவர்களுக்கு மன்னித்தால், உங்கள் பரமபிதா உங்களுக்கும் மன்னிப்பார் - மத் *6:14*
- மனுஷருடைய தப்பிதங்களை நீங்கள் அவர்களுக்கு மன்னியாதிருந்தால், உங்கள் பிதா உங்கள் தப்பிதங்களையும் மன்னியாதிருப்பார் - மத் *6:15*
- நீங்களும் அவனவன் தன் தன் சகோதரன் செய்த தப்பிதங்களை மனப்பூர்வமாய் மன்னியாமற்போனால், என் பரமபிதாவும் உங்களுக்கு இப்படியே செய்வார் - மத் *18:35*

# முடிவுரை

- தேவனுடைய பண்புகளை அறிந்துக்கொள்வதினால் தேவன் எப்படிப்பட்டவர் என்பதை அறிந்துக்கொள்ளலாம்
- அவர் நம்மிடம் எதிர்ப்பார்ப்பதை புரிந்துக்கொள்ளலாம், தேவனுக்கு பிரியமானபடி நடக்கலாம்; தேவனுடைய சித்தத்தை சரியாய் செய்யலாம்
- போலியான தெய்வங்களை அடையாளம் கண்டுக்கொள்ளலாம்
- நம்முடைய தேவைகளை சந்திக்க நமக்கு துணையாக நிற்பவர் யார் என்றும், நமக்குள் இருந்து நம்மை பாதுகாக்கும் தேவன் எவ்வளவு பெரியவர் என்றும் விளங்கும்
- இதனால் நம்முடைய விசுவாசம்(உறுதியான நம்பிக்கை) பெருகும்
- எந்த சூழ்நிலைகளையும் எளிதாய் மேற்க்கொள்ளலாம்

# முடிவுரை

- இந்த வீடியோ மூலமா கேட்டவைகள் உங்களுக்கு புரிந்திருக்கும் என்று நெனைக்கிறேன்.
- இந்த வீடியோவில் அநேக வசனங்களை கொடுத்திருக்கிறேன், அவைகளை நான் வாசிக்கவில்லை, ஒருமுறையாவது வாசித்து பாருங்கள்
- தேவனைக் குறித்து மேலும் அறிந்துக்கொள்ள எங்களுடைய மற்ற வீடியோக்களையும் பாருங்கள்.
- ஏதாவது கேள்விகள் இருந்தால் *WhatsApp* அல்லது *Email* மூலமாக தொடர்புக்கொள்ளுங்கள்.
- தேவன் தம்மைகுறித்து இன்னும் அதிகமாய் அறிந்துக்கொள்ள உதவி செய்வாராக

# Thank You

BIBLE MINUTES

To know more, please watch other related videos from our YouTube channel or Facebook page and feel free to contact us for any further questions


By Phone / WhatsApp

+91 90190 49070
+91 76765 05599

Email

wordofgod@wordofgod.in

Social

YouTube: Bible Minutes
Facebook: Bible Minutes